# நவீன தெனாலிராமன்

பேராசிரியர்
டாக்டர் ரா. சீனிவாசன்
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.



**முதற்பதிப்பு ஜூன் – 1992**
*1000 பிரதிகள்*



பேராசிரியர்
**டாக்டர். ரா. சீனிவாசன்**
*எம்.ஏ.;எம்லிட்.;பி.எச்.டி*

**அணியகம்**
**5, செல்லம்மாள் தெரு,**
**சென்னை—30**
**போன்: 611230**

## விலை ரூ. 10-00

**பிறநூல்கள்:**

| | | |
|---|---|---|
| கம்பராமாயணம் | — | 20-00 |
| மாபாரதம் | — | 20-00 |
| சீவகசிந்தாமணி | — | 20-00 |
| திருவிளையாடற் புராணம் | — | 20-00 |

அச்சகம
ANIYAKAM PRINTERS
16/1 KANDAN STREET, MADRAS —30

# முன்னுரை

'நவீன தெனாலி ராமன்' என்ற தலைப்பில் நான்கு கதைகள் இடம் பெற்றுள்ளன. அனைத்தும் நகைச்சுவை நிரம்பிய கதைகள் ஆகும். முதல்தலைப்பு வானத்து மீன்;அடுத்தது நவீன தெனாலிராமன்;அடுத்தது ராசியான பெயர்; ஈற்றில் இடம் பெறுவது நாரதரின் பூலோக யாத்திரை.

இன்றைய சினிமாவில் கதைகளின் போக்குகளை முதல் கதை விமரிக்கிறது: நடிகை இறந்து விடுகிறாள். நாடே ஒப்பாரி வைக்கிறது. காரணம் அவளை ரசித்தவர்கள் கலா ரசிகர்கள்; கலை உலக இழப்பு என்பதால் இந்த அளவிலா அங்கலாய்ப்பு; அழகி அவள் ஏன் செத்தாள்? யார் கொலை செய்தது? தற்கொலையா படுகொலையா அந்த வகையில் போலீசு நுழைகிறது. எனவே மர்ம நாவலின் சாயல் இதில் இடம் பெறுகிறது.

அடுத்தது நவீன தெனாலிராமன். உதிரியாக எழும் துணுக்குகளுக்குப் பாத்திரங்கள் இடம் சூழ்நிலை அமைத்துத் தொடர்ச் சித்திரமாக ஆக்கப்பட்டுள்ளது. வாழ்க்கையில் சிரிக்கக் கற்றுக் கொள்ளவேண்டும்; அதற்கு அவன் கதை ஓர் எடுத்துக்காட்டு ஆகிறது.

சந்தர்ப்பங்கள்தான் மனிதனை உயர்த்துகிறது. லைட் பாயாக நுழைந்தவன் லைப் பாய் சோப்பில் விளம்பரம் ஆகிப் பின் நடிகனாகி விட்டான் என்பது இன்றைய பேச்சு வழக்கு. இந்தக் கதாநாயகன் சந்தர்ப்பவாதிதான் ஏன் ஒவ்வொருவரும் சந்தர்ப்பவாதிதான். அது இன்றைய வாழ்க்கைச் சூழ்நிலை அவன் எதையும் நகைச்சுவையோடு காண்கிறான்; எடுத்துக்கொள்கிறான். சிரிப்பும் சிந்தனையும் கூடிய கதை இது.

கம்ப்யூட்டர் யுகம் இது எனினும் கந்தபுராணத்தை நாம் மறப்பது இல்லை. தேவலோகம் அடைந்துள்ள மாற்றத்தை நாரதர் கூறுகிறார். பாரத நாட்டில் கலை எப்படி இயங்குகிறது. கடத்தலை வைத்து இராமாயணம் எழுதினார்கள். இன்று அதே சப்ஜக்ட்தான் சினிமாக்கதைகள். இவை காலத்தின் பிரதிபலிப்பு. கடத்தல் வரை வந்தவர்கள் பயங்கரவாதத்தை இன்னும் தொடவில்லை. அப்படித் தொட்ட கதையும் திரை வானில் கண்ட நாரதர் பாரதம் போராடுகிறது; குழப்பத்திலிருந்து விடுபட வாய்ப்புகள் இருக்கின்றன என்பதைக் கண்டு கொள்கிறார்.

அவர் ஒண்டிக்கட்டையா பொடி மட்டையா என்பது கேட்கப்படும் வினா; அறிவுரை வேறு அறவுரை வேறு அறவுரை வேறு என்று தெளிவுபடுத்துகிறார். பூமி யாத்திரை செய்த அவர் கண்டு கொள்வது ஜன நாயகக் கொடுமை; அதனால் மக்களுக்கு ஏற்பட்டுள்ள நிலைமை; இன்றைய வாழ்க்கையின் சிக்கல்கள் இவற்றை அலசிக் காண்கிறார்.

பாரதப்பிரதமரைச் சந்திக்கிறார் நாரதர். அவரிடம் ஜம்பம் சாயவில்லை. காந்தீயம் இன்னும் ஒளிவிட்டுக் கொண்டிருக்கிறது. கலையில் மாற்றம் ஏற்படுகிறது. அதை அவர் காண்கிறார்.

எழுத்து என்பது பொழுதுபோக்குக்கு உரிய மௌனக் கலை; சிந்தனைக் கதிர்கள் கொண்டது. உள்ளதை உள்ளபடி கூறுவது அல்லாது; அதை வைத்து விளையாடுவதுதான் எழுத்து என்பதற்கு இந்நூல் சான்று பகரும்.

ரா. சீனிவாசன்

# வானத்து மீன்

## (நகைச்சுவைச் சித்திரம்)

காற்றும் மழையும் ஒரு சேர அடித்துக் கொண்டிருந்தது. கும்மிருட்டு; மின்சாரம் அன்று வேலை நிறுத்தம் செய்து விட்டது, காவல்துறையினர் கூட ரோந்து சுற்றுவதற்கு அஞ்சினார்கள். அங்கே பேய்கள் உலவுவதாகப் பேசிக்கொண்டிருந்தனர். அதில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை என்றாலும் அந்த இருட்டும் காற்றும் மழையும் நம்ப வைத்தது. அவர்கள் கால்கள் அடியெடுத்து வைக்க முடியாமல் பின்னிக் கொண்டன.

சுற்றிலும் மரம் செடிகள், தோப்பு என்றும் சொல்ல முடியாது தோட்டம் என்றும் சொல்ல முடியாதுபுதிதாய்க் கட்டிய பங்களா; திரைவானம் அள்ளித்தந்த பணம் அதனால் கட்டப்பட்டது; அவள் புதிய நட்சத்திரம், அவளுக்கு இருக்கிற சிறப்பு நடிப்பு என்பதைவிட கவர்ச்சிதான். டியூட் ஆடிவிட்டு வந்த களைப்பு; நடிகன் அவளைக் கிள்ளிவிட்டான்; அதை அவளால் வெளியே சொல்ல முடியவில்லை; அதை எதிர்ப்பதா ஏற்றுக்கொள்வதா என்று தெரியவில்லை. ஒரே வலி; வெளியே சொல்ல முடியவில்லை.

அந்த நோவு அவளுக்கு வேதனையைத் தந்தது; அதற்குக்காரணம் அவள் அழகும் நடிப்பும்தான். அந்த நினைவு அவளை அப்படியே மெய்மறக்கச் செய்தது; அவளுக்குத் தூக்கம் வராவிட்டால் கொஞ்சம் ஓவராக அமிர்தம் அருந்துவது வழக்கம். அன்று குடிக்கவும் மறந்து விட்டாள். வேறொரு மயக்கத்தில் இருந்தாள்; இந்த மயக்கம் அவளுக்குத் தேவைப்பட்டது.

கேரள நாட்டில் இருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட அழகி அவள்; அவள், உடல்அழகு, லாவகம்நெளிவு, இடை மெலிவு, தொடைவலிவு; நடை அழகு; ஒவ்வொரு அசைவும் அவள் மற்றவர்களை மெய் மறக்கச் செய்வது போன்று இருந்தது. அந்த அசைவே அவள் வெற்றிக்குக் காரணம்.இதழ்கள் இனிமையாகப் பேசின அவள் விட்டுக் கொடுக்கும் சுபாவம் உள்ளவள்; அதனால் விரைவில் முன்னுக்கு வந்தவள்.

பணம் வந்ததும் பக்கபலம் கூடியதால் கார் டிரைவர் கெடுபிடி ஆட்கள் சொந்தம் என்று சொல்லிக் கொண்டவர் பாட்டி மாமன் இவர்கள் எல்லாம் படை சூழ ஆட்சி நடந்து கொண்டிருந்தது.

மறுநாள் செய்தி பரபரப்பாயிற்று ; மூடிய கண்கள் திறக்கவில்லை. பத்திரிக்கைகள் 'மர்மக் கொலை' என்று ஓரம் கட்டியது தற்கொலையா படுகொலையா என்று முடிவு செய்யப்படவில்லை என்று செய்தி வெளியிட்டது. ரசிகர்கள் துக்கத்திலும் வியப்பிலும் ஆழ்ந்தன . ஒரு கவிஞர்; புதுக் கவிஞர்

3

'திரைவானம் மின்னியது! நட்சத்திரங்கள் சிரித்தன
கலையின் இருப்பிடமா நீ நீ கலைக்கு இருப்பிடமா
நிலை கொள்ள முடியாத துயரில் ஆழ்கிறோம்
'ஊர்வசி நீ' உறங்கிய கண் திறக்காதது ஏன்?
இதற்குள்ளாகவா நீ மறைய வேண்டும்
விடிவதற்குள் விண்மீன் மறைவது இல்லை
அதற்கு நீ ஒரு புது சரித்திரம் படைத்துவிட்டாய்'

என்று பாடிய கவிதை முன்பக்கத்தில் இடம் பெறவில்லை நடுப்பக்கத்தில் அவ்ள் படம் ஒருபக்கம் கவிதை மறுபக்கம் அழகாக அச்சிடப்பட்டுக் கறுப்புநிறம் தீட்டப்பட்டது.

காவல்துறையின் ஆவல் தூண்டப் பட்டது; மோப்ப நாய் அனுமதியின்றி உள் நுழைந்தது; திரை நடிகையை மோப்பம் பிடிக்கும் வாய்ப்பில் அது நிலை கொள்ளவில்லை. அதற்கு அப்படி ஒரு வாய்ப்பு. ட.ஐ ஜி, கமிஷனர், சாதாரண காவலர், இப்படி இவர் கள் தின்பண்டத்தைச் சுற்றிக்கொள்வதைப் போல் சுற் றிக்கொண்டனர்; அவர்கள் பிணத்தின் அருகில் வந்து முகத்தைப் பார்த்தனர். மேக்கப் இல்லாத அவள் முகத்தை முதன் முதல் பார்க்கிற வாய்ப்பு அவர்களுக்குக் கிடைத்தது. பார்க்க சகிக்கவில்லை; மறுபடியும் துணி போட்டு மூடினர்.

ரேகை அடையாள நிபுணர்கள் வந்தனர்; அவள் மார்பு துணி விலக்கப்பட்டது; ஜாக்கெட்டை அவளே கழற்றிவிட்டு இருந்தாள் அது சற்றுத் தொலைவில்

கிடந்தது. இது இவர்களுக்கு ஒரு விதமான சந்தேகததை உண்டாக்கியது. அப்படியும் இருக்கலாம் 'Rape' என்று சந்தேகித்தனர். மார்பு கன்னி என்று அவள் பெயர் சொல்லிக் கொண்டிருந்தது. என்னமோ நடந்திருக்கிறது என்று யூகித்தார்கள் ; மற்றைய இடங்களைப் பார்க்க அவர்களுக்குத் துணிவு வரவில்லை. அந்த உரிமை போஸ்டுமார்ட்டம் டாக்டர்களுக்கு என்று ஒதுக்கிவைக் கப்பட்டது.

அன்று இரவு ரோந்துக்குப் போடப்பட்ட காவலர் இருவரும் முதலில் விசாரிக்கப்பட்டனர்.

'நீங்கள் அந்த நேரத்தில் எங்கே இருந்தீர்கள்?'

'அந்த நேரத்தில் பெரிய மழை; டீ கடையை விட்டு வெளியே வரமுடியவில்லை; அவன் ஓசியில் டீ போட்டுக் கொடுத்தான்.

'அதைக் கேட்கவில்லை'

'நீங்கள் டியூட்டியில் டீ குடிக்கலாமா?'

'காப்பி கிடைக்கவில்லை அதுதான் கிடைத்தது'

'கொலை செய்யும் போது நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள் ?'

'வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தோம்'

'அதற்காகவா அரசாங்கம் சம்பளம் தருகிறது'

'கொலை நடக்கும்போது நாங்கள் குறுக்கிட்டால் கொலையே நடக்காது; அப்புறம் நமக்கு வேலையே இருக் காது; தடுப்பது நம் கடமை அல்ல; நடக்கவிட்டு வேடிக்கை பார்ப்பதுதான் நம் டியூட்டி'

''அவர்கள் கத்தினார்களா''

''கத்தினால் அவர்கள் செத்து இருக்க முடியாதே. அப்படி ஒன்றும் குரல் கொடுத்ததாகத் தெரியவில்லை.''

''நீங்கள் இந்த பங்களாவைச் சுற்றிப் பார்ப்பது உண்டா?''

''தெய்வ தரிசனத்துக்கு பக்தர்கள் காத்திருப்பது போல், நாங்கள் காத்திருப்பது உண்டு''.

'அதைக் கேட்கவில்லை விஷயத்திற்கு வாங்க'

'உங்கள் பார்வை இந்த பங்களாவில் படுவது உண்டா ?'

'வைத்த கண்ணை வாங்க மாட்டோம். எங்க துரதிருஷ்டம் அந்த அம்மாவின் சேலையைக்கூட நாங்க பார்த்தது இல்லை.'

''அந்த நேரத்தில் யார் யார் போவார்கள்?'

''மிஸ்டர் பால்காரர், மிஸ்டர் பேப்பர்காரர்' மிஸ்டர் வேலைக்காரர்''.

''என்னப்பா மிஸ்டர் போடறே''

'யாரையும் மரியாதையாகவும் கண்ணியமாகவும் பேசணும்னு நீங்கதானே சொல்லுவீங்க. அதுக்குதானே மரியாதை வாரம்னு ஒன்னு நடத்துறீங்க

'ஏன் கேள்வி கேட்க வேண்டியதுதானே ?'

'சந்தேககேசில் யரையும் உள்ளே தள்ளமுடியாதே'

'பிரபலமான நடிகை என்றால் யார் வருகிறார்கள் யார் போகிறார்கள் என்பதை 'நோட்' செய்ய வேண்டாமா?'

'கொலை நடக்கும் என்று தெரிந்திருந்தால் கேட்டு இருக்கலாம் எங்களிடம் அவர்கள் சொல்லிவிட்டுப் போகலையே?

'யார்தான் உள்ளே போனார்கள்? அரைமணி ஒரு மணி நேரத்துக்கு முன்பு.

'மனிதர்களைக் காணமுடியவில்லை

கார்கள் தான் சென்றன'

'ஆட்டோ'

அவர்தான் உள்ளே போய்விட்டாரே'

'யார அது?'

'ரங்கன் அவரைத் தான் கேட்கிறீர்கள் என்று நினைத்தோம்.

,சரிநீங்கள் டிபார்ட்மெண்டுக்கு வாங்க; சஸ்பெண்டு செய்கிறேன்,

''ஓசியில் டீ குடித்தது.
டியூட்டியை மறந்து மழையில் நடுங்கியது
கொலை நடவாமல் இருக்க முன் நடவடிக்கை எடுக்காதது; இதெல்லாம் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கத் தக்கவை''

'டேய் கோவத்திலே சட்டம் பேசறாரு அவருக்கு ஒரு 'பாட்டல்' கொடுத்தால் சரியாய்ப் போயிடுவாரு.

## 2

அந்த வீட்டு நாய் முதலில் விசாரிக்க பட்டது.

'கொலை நடந்த் நேரத்தில் நாய் எங்கே இருந்தது?'

'எதிர் வீட்டு நாயோடு ரகசியம் பேசிக் கொண்டிருந்தது'

'எப்படித் தெரியும்?'

''யாரும் இல்லாத நேரத்தில் எதிர் வீட்டு நாயைப் பார்த்துக் குரைக்கும் இதன் குரல் கேட்டு அதுவும் பதிலுக்குக் குரைக்கும். பின்பு இரைத்துக் கொண்டே வீடு வந்து சேரும். அம்மாவை குஷிப்படுத்த மடிமீது புரளும்; அவர்கள அதைத்தடவிக் கொடுத்து அணைத்துக்கொள்வார்கள் அது அதற்கப்புறம் சூப்புக்குச் சமையலறைக்கு ஓடும்.'

'நேற்று மாடிக்கு அது வந்ததா'

'எதிர் வீட்டு நாய் அதைவிடவில்லை

'என்ன உளர்றீங்க'

விடுபட முடியவில்லை,

நாயின் விசாரணை முடிந்தது.

நீ 'இந்த வீட்டு வேலைக்காரியா'

'அந்த அம்மா எங்களை அப்படிப் பார்க்கலைங்க'

'வேலை செய்றது யார்'

'வேலையா அப்படி ஒன்றும் செய்றதா இல்லையே; சமைப்போம், சாப்பிடுவோம் அம்மாவுக்கும் கொஞ்சம் வைப்போம்'

'கொலை நடந்த அன்று என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'

'கத்தி தீட்டிக் கொண்டிருந்தோம் கத்தரிக்காய் அறுக்க'.

'அதைக் கேக்கலை.

'நீங்களும் உன புருஷனும் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'

'அது அவருக்குத்தான் தெரியும்; எனக்குத் தெரியாது'

'என்ன தெரியாது?

'நான் சொல்லக் கூடாது'

'அதைக்கேக்கலை; சம்பவம் நடந்த அன்று தூங்கிக் கொடிண்டிருந்தீர்களா முழித்துக் கொண்டிருந்தீர்களா?

'அவர் எங்கேங்க என்னைத் தூங்க விடராரு'

'மேலே கத்தறது கேக்கலையா?

''எங்களுக்கு பயமுங்க இங்கே பேய்கள் நடமாடறது உண்டு. வெளியிலேயே வரமாட்டோம்'.

'அவர்கள் எப்படி செத்து இருப்பாங்க?'

''பேய்தான் அறைஞ்சிட்டு இருக்கும்'

'எப்படி சொல்றே?'

'மனுஷன் அந்த அம்மாவை அணுக மாட்டான்க. அந்த அம்மா அழகிலே அவனவன் சொக்கிப் போவானே தவிர எவனும் அறைய மாட்டான். அப்படி அறைஞ்சால் அவன் மனுஷனா இருக்கமுடியாது; பேயாத்தான் இருக்கமுடியும்'

,நீ எப்படி சொல்றே?'

'இதே வீட்டிலே இரண்டு வருஷத்துக்கு முன்-

ணாலே ஒரு சினிமாக்காரி இருந்தாங்க. அவங்க தற் கொலை செய்துகிட்டாங்க; இந்த வீட்டுக்கு பேய் பங்களா என்று யாரும் குடி வரலைங்க. யாரும் வாங்கவும் வரலை.

'இவங்க மட்டும் ஏன் வாங்கினாங்க?'

''விலை குறைவா வந்திச்சு அதனால்தான்.

அந்தப் பேய்தான் அறைஞ்சிருக்கணும் தனக்குப் போட்டியா இந்த அம்மா நடிக்கறது பிடிக்கலைங்க; தனக்கு இருந்த புகழை இவங்க வந்து அழிக்கிறது தாங் கலை; அதனால்தான் அடிச்சுச் கொன்னூட்டுதுங்க'

'யார் சொன்னது'

'சொல்றது என்னாங்க நீங்க இதுவரையும் யார் கொலை செஞ்சாங்கனு கண்டு பிடிக்கலை. அப்ப பேய் தான் செஞ்சிருக்கணும்.'

அடுத்தது கார் டிரைவர்

''நீ எத்தனை மாசமா இங்கே டிரைவரா இருக்கே

''கார் வாங்கினதிலே இருந்து'

''நீ இங்கே எப்படி வந்தே'

''இதுக்கு நான்பதில் சொன்னா நீங்க சிரிப்பீங்க'

''கேக்கற கேள்விக்கு பதில் சொல்லு'

''நீங்க எப்படி வந்தீங்க'

''மெயின் ரோடு வழியாக'-

அவன் சிரித்தான்'

''ஏன் சிரிக்கிறே'

''நீங்கதான் பதில் சொல்லிட்டிங்களே'

''அது இல்லே எப்படி வேலைக்குவந்தே''

''இந்த அம்மா நடித்த படம்னா எனக்கு உயிர் அவங்களைப் பார்க்கணும் அவங்களோடே, பேசணும் முடிஞ்சா அவங்களோடேயே இருக்கணும்னு ஆசை.

''என்னடா உளர்றே'

இது போல எத்தனையோ பேர் உளர்ரதை நான் பார்த்து இருக்கிறேன் நான் விதிவிலக்கு இல்லே'

'யார் உன்னை சிபாரிசு செய்தது'

'நான் கொஞ்சம் அழகா இருக்கேன்னு...

''என்னடா உளர்றே'

''அவங்களுக்கு அழகா இருக்கிற ஆம்பளைங்க என்றாலே பிடிக்கும். பொம்பளைங்க இவங்களைவிட அழகா இருந்தால் பிடிக்காது?;

''உனக்கு எப்படித் தெரியும்?'

''டிரைவர்! எப்படி அந்த 'பொம்பளை?'

''உங்க கால்லே கட்டி அடிக்கணும் என்பேன். உடனே அவங்களுக்கு உச்சி குளிர்ந்துடும்'

''அவங்க புகழ்லே மயங்குவாங்களா?

''நீங்க சினிமாக் காரங்களைப் பார்த்ததே இல்லைன்னு தெரியுது யரர் எப்படி நினைக்கிறாங்க அதுதான் அவங்க நினைப்பு யோசனை''

'அன்னைக்கு ஸ்டுடியோவிலிருந்து உன் காரிலே தானே வந்தாங்க'

''என் கார் இல்லை, அம்மாவின் காரிலே. நான்

டிரைவர்.

'அதுதான் நீ ஓட்டி வந்த காரிலேன்னு கேக்க றேன்.

'ஆமாமுங்க'

'கூட யாராவது வந்தாங்களா'

'யாரும் இல்லைங்க'

''உன்னோடே பேசினாங்களா'

'முருகு! நீ ரொம்ப அழகா இருக்கே என்றாங்க.

'உன் பேர் என்ன?'

''சுந்தர்''

''பின் ஏன் முருகு என்று கூப்பிட்டாங்க?'

''அழகு தமிழிலே பேசணும்னு ஒரு சின்ன ஆசை'

'நீ அழகா இருக்கே என்று சொன்னாங்க'

'உங்க சாப்பாடுங்க'' என்றேன்.

'நீ இன்னைக்குச் சாப்புட்டுட்டு ரூமுக்கு வந்திடு'னு சொன்னாங்க.

'எதுக்கு'

'அதிருஷ்டம் காத்திருந்தது'

'என்ன உன்னை......

'நாளையிலே இருந்து நீ வேலைக்கு வேணாம்னு சொல்லிட்டாங்க'

'எதுக்கு?'

நான் ரொம்ப அழகா இருக்கேனாம். அவங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியலையாம். நான் இருந் தால் அவங்க மூட் கெட்டுப்போகச் சந்தர்ப்பம் ஏற்படு

மாம். எனக்குச் சீட்டுக் கிழிச்சிட்டாங்க?

'அதனால் நீ கோவத்திலே...!

'தீர்த்துக் கட்டிட்டேனுங்க'

'நன்றி கெட்டவன்யா நீ'

'தொழிலாளி எல்லாம் அப்படித்தானுங்க. கொடுக்கிற வரைதான் எசமான் மரியாதை எல்லாம். கெடுக்க ஆரம்பிச்சால் அவன் மிருகமா மாறிடுவாங்க.'

'அப்படின்னா குற்றத்தை ஒப்புக்கிறயா?'

என்ன குற்றத்தை?!

'கொலைக் குற்றம்'

'கொஞ்சம் குறைக்கலாமே?

'அதெல்லாம் பின்னாலே பேசிக்கலாம். ஏறு வண்டியிலே'

அடுத்தது அவள் அம்மா.

'நீங்கதானே அவங்க அம்மா?''

'அவளைப் பெற்றவள்'

'நீங்க என்ன சொல்றீங்க'

''நான் அப்பவே சொன்னேன். பேய் திரியும் வீடு என்று சொன்னேன் கேட்கலை.

''உங்க பெண்ணை சந்திக்கிறவங்க யார் யார் என்று சொல்லமுடியுமா?''

''என்கிட்டே சொல்லிட்டா பழகறா எவன்எவனோ வருவான். சிரிக்கிறதுக்கு வேறு இடம் கிடைக்காட்டால் இங்கே வந்து இருப்பாங்க கேட்டால் நீ அம்மாவா என்று

கேவலப்படுத்தி உட்காருணும்பாங்க.

'இப்பொழுது ரசிகப் பெருமக்கள்' என்ன சொல்கிறார்கள்?'

'அவள் எப்படி செத்தாள்?

'யாரோ கூட இருந்துதான் சதி செய்திருக்கிறார்கள்' என்கிறார்கள்.

'உன் மகள் இறந்தது உங்களுக்கு அதிர்ச்சியைத் தரலையா'

'சந்தோஷத்தைக் கொடுத்திருக்கிறது' பத்திரிக்கைக்கு இந்தச் செய்தியைக் கொடுங்கோ சந்தோஷப் படுவாங்க'

'இந்தக் கொலையிலே உங்களுக்கு உடந்தையாக யாரோ இருக்கிறார்கள் என்று சொல்றேன்'

'தப்பா சொல்றிங்க நான்தான் கொலை செய்தேன்;

'காரணம்!'

'அவள் டிரைவரோடு தொடர்பு கொள்றது எனக்குப் பிடிக்கலை'

'அவன்தான் இல்லைன்னு சொல்றானே'

'உண்டு என்று அவன் சொல்வானா?

'நீங்க என்ன சொல்றீங்க'

அவள் நடத்தை எனக்குப் பிடிக்கலை'

'எப்படி சொல்றீங்க?'

'அதைப் பின்னாலே கோர்ட்டிலே சொல்றேன்

'இதை நாங்க நம்பமுடியாது.'

இது ஒரு காரணமாக இருக்காது ஏதோ மறைக் கிறீங்க. நீங்க கொலை செய்திருக்க முடியாது.

'இல்லை நான்தான் கொலை செய்தேன்'

'உங்களுக்குப் பைத்தியமா புடிச்சிருக்கு?

'நான் சொல்றேன் நான்தான் கொலை செய் தேன். நம்பமாட்டேன் என்கிறீங்க'

'கொலை செய்வதக்கு ஒரு மோடிவ் இருக்கணும் இதை ஒரு மோடிவ்வாக ஒப்புக கொள்ள முடியாது''

''சரி நான் கொலை செய்யலை''

அதுவும் எடுத்துக் கொள்ள முடியாது'

''கேக்கற கேள்விகளுக்கு மட்டும் பதில் சொல்லுங்க

''வேறு எதுவும் சொல்லக்கூடாது'

''சம்பந்தமில்லாத விஷயங்களைப் பேசக் கூடாது'

'இது தற்கொலையாக இருக்கக் கூடாதா'

'அதற்கு வாய்ப்பு இல்லை'

'எப்படி சொல்றீங்க' .

'நினைச்சதைச் சாதிப்பாள்;

'யாரையாவது காதலித்தது உண்டா'

'ஒரு முறை; அவன் மலைநாட்டுக் காரியைக் கல்யா ணம் பண்ணிக்கிட்டான் அதுக்கப்புறம் காதலிக்கறதையே விட்டுட்டாக.

'கல்யாணம் எதுவும் நடக்கலையா?

'அமெரிக்காவிலே இருந்து யாரும் வந்து கேக்கலை; அதுக்குத்தான் காத்துகிட்டிருக்கோம்

'ஏன் இந்த நாட்டிலே யாரும் இல்லையா?

'அவஙகதான் நீ அப்படி இப்படின்னு கேட்டுத் தொலைக்க மாட்டாங்க'

'நாட்டுப் பற்றே உங்களுக்கு இல்லையே'

'உலகப் பற்று அதிகம்'

'சரி யார் மேலேதான் சந்தேகம்'

'இது, பேய்வீடு; எல்லாரும் பேய்தான் யார் வேணுமானாலும் கொலை செய்திருக்கலாம்

'தெளிவாகச் சொல்லுங்க'

'நான்தான் கொலை செய்தேன்'

'சரி ஏறுங்க வண்டியில்.'

## 3

செய்தித்தாளில் பரபரப்பாக அச்சு ஏறியது டிரைவர் சுந்தரம் என்ற முருகு என்பவர் நடிகை ஊர்மிளாவைக் கொலை செய்தார். 'ரேப்' செய்ய முயற்சி செய்து இருக்கிறார். அவள் எவ்வளவோ மன்றாடி இருக்கிறாள். அவன் அவள் கழுத்தை முறித்துக் கதறககதறச் சித்திரவதை செய்து கொலை செய்திருக்கிறான் அவனே தான் கொலை செய்ததாக வாக்குமூலம் கொடுத்திருக்கிறான் நடிகையின் தாயார் தான் தான் அவனைக் கொலை செய்யச் சொன்னதாக வாக்குமூலம் தந்திருக்கிறாள். நடிகையின் நடத்தையில் நம்பிக்கை இல்லாததால் தாய் மகளைக் கொலை செய்யத்தூண்டினாள் என்று விளக்கம் தரப்பட்டது.

இது பற்றிப் பரபரப்பாக ஸ்டுடியோவில் பேசப் பட்டது.

'டிரைவர் எல்லாம் வயசானவங்களாக இருக்கணும்'

'வண்டியைப் பார்த்து ஓட்டணுமே'

'அவர்கள் நிதானமாக ஓட்டுவார்கள்'

'அதுக்குத்தான் self டிரைவிங்க வேணும் என்கிறது

'அதைவிட ஒருத்தரைக் கலியாணம் பண்ணிகிட்டு அந்த வேலையை அவரிடம் ஒப்புவித்து விடலாம்' என்று எதிலும் 'பால்' கலந்து பேசும் சுபாவம் படைத்த துணை நடிகை அன்று சொல்லிச் சிரிப்பு உண்டாக்கினாள்.

அந்தப் பேச்சில் புதிய நடிகை ஒருத்தி வந்து கலந்து கொள்கிறாள்.

''நீங்க எங்கே போறிங்க?''

''ஷூட்டிங்குக்கு''

''படமா?'

'அவங்க விட்டதிலே இருந்து முடிக்க என்னை Book பண்ணி இருக்காங்க. Call Sheet கொடுத்திருக்கிறேன்'

''அது எப்படி முடியும்'

'கதைக்காக சினிமா இல்லை.

'புதிய திருப்பம் ஏற்படுத்த முடியும். கதாநாயகி இறந்து விடுகிறாள். அவள் தூக்க மாத்திரை சாப்பிட்ட தால் இறந்து விடுகிறாள். அவளுக்குத்தான் கணவன் நடத்தையில் சந்தேகம் வந்து விட்டது. தான் தவறிப் போய் கற்பு இழந்தாலும் பரவாயில்லை, கணவன் தவறக் கூடாது என்பதில் அவள் விடாப்பிடியான கொள்கை

வைத்திருந்தாள். அவன் பூஜைக்கு வாங்கி வைத்த பூவை யாரோ ஒரு பூங்கோதைக்கு என்று தவறாக நினைக்கிறான் மாத்திரை விழுங்கியபிறகு உண்மை தெரிகிறது. அதற்குள் மருந்து வேகமாக வேலை செய்து விட்டது. மற்றமருந்து களில் கலப்பு உண்டு; இதில் மட்டும் இருப்பது இல்லை

இது கதையின் தொடர்ச்சி. அதற்குப் பிறகு அவளைத் தூக்கிச் சுவரில் மாட்டித் தொங்கவிட்டான். சுவாமிக்குப் போடும் மாலையை இந்தச் சிவகாமிக்குப் போடத் தொடங்கினான். அவள் ஒரு குழந்தையை முதல் கணவனுக்குப் பெற்றெடுத்து அநாதை இல்லத்தில் விட்டு வைத்திருந்தாள் என்பது அவள் செத்த பிறகுதான் உண்மை தெரிந்தது. அந்தக் குழந்தையைத் தேடிக் கொண்டுவந்து, அவள் நினைவாக அந்தக் குழந்தையை வளர்க்கத் தொடங்கினான். அந்த அனாதைக் குழந்தை அம்மா வேண்டும் என்று அடம் பிடித்தது.

எந்தக் கடையிலும் அம்மா விலைக்குக் கிடைக்க வில்லை; அவனுக்கு மறுமணம் செய்து கொள்ள ஆசை தான். அதை வெளியே காட்டிக்கொள்ளமல் குழந்தைக் குத் தாயாக ஒருத்தியைத் தேடினான். அந்தப் புதிய பாத் திரத்தை இந்தப் புதிய நடிகை ஏற்க முன்வந்தாள். அவள் தான் இந்த நடிகை.

''நீங்கள் தாயாக நடிக்க எப்படி ஒப்புக் கொண் டீர்கள்?'

''நாம் ஒப்புக் கொண்டா தாயாகிறோம். 'வந்து அடைகிறது' என்று நயம்படப் பேசினாள்.

அனைவரும் சிரித்தார்கள்

'PILLS' என அவசரமாக ஒருத்தி இடை மறித்தாள்.

'கவர்ச்சி சரிந்து விடும்; தாய்மை சரியாது' என்றாள் புது நடிகை.,

'சிலருக்கு அப்படி' என்றாள் பில்ஸ் நடிகை.

'அவள் பேசிய சரிவு எது' என்று தெரியவில்லை.

'ஹீரோயின் நடிகையர் நிலைகக முடியாது. எவளாவது காலேஜிலே ஒழுங்காப் படிக்க முடியாதவள் கலைக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள வருவாள்; பழைய நடிகை அதோ கதிதான். இதுபோல் புதுமுகங்கள் தாய்க்கு வருவதில்லை' என்று காரண காரியம் கூறினாள்.

ஊர்மிளா இல்லாதது அந்த ஸ்டூடியோவுக்கே களை இல்லாமல் போய்விட்டது. 'ஊரு ஊரு' என்று கூப்பிட்டுக் கொண்டே இருப்பார்கள். ஊரை விட்டு மட்டுமல்ல அவள் இந்த உலகைவிட்டே போய்விட்டாள். இந்த துக்கம் ஒவ்வொருவர் நெஞ்சையும் அடைத்துக் கொண்டு இருந்தது.

லைட்பாய்க்கு இப்பொழுது கையோட வில்லை, கால் ஓடவில்லை; அவளுக்கு லைட் அடித்த கை மற்ற ஒரு புதுமுகத்துக்கு அடிக்க அவனுக்குப் பிடிக்கவில்லையாம். இப்படி அவன் பேசிக கொள்கிறானாம்; முகம் Touch up பண்ண பக்கத்தில் நிற்கும் 'பாய்' அவனுக்கு மற்றொரு முகத்தை Touch செய்ய விருப்ப

மில்லையாம். Makup-man அவர் கை மறுபடியும் இவ்வளவு அழகாக இனி யாருக்கு மேக்கப் செய்யப் போகிறோம் என்று ஏங்கிக் கொண்டிருந்ததாம். இப்படி ஒவ்வொரு துணைத் தொழிலாளியையும் தவிக்க விட்டுவிட்டு அவள் போய்ச் சேர்ந்துவிட்டாள்' என்று பேசிக் கொள்கிறார்கள்.

அங்கேயும் போலீசு தன் வாலை நுழைக்க ஆரம்பித்தது. போலீஸ் அதிகாரி வீட்டில் இப்படி ஒரு 'டைலாக்' பேசப்பட்டது.

'ஏனுங்க சுந்தரத்தைத்தான் அரெஸ்டு பண்ணிட்டாங்களே மறுபடியும்?...'

'இதுதான் எங்க டெக்னிக். சினிமாவிலே 'டூப்' போடறாங்களே அது மாதிரிதான் இந்த சுந்தரம், இன்னும் அவள் அம்மா இவங்க எல்லாம். அவாகள் குற்றவாளிகள் என்று தம்மைத தாமே சொலலிக கொள்கிறார்களே தவிர இன்னும் நாங்கள் குற்றவாளிகள் என்று கோர்ட்டில் நிறுததவிலலை. ஏழைகள் துணிந்து இவ்வளவு பெரிய குற்றததைச் செய்ய மாட்டார்கள். இது மேல் மட்டத்து விவகாரமாகத்தான் இருக்கவேண்டும். உண்மைக் குற்றவாளி கிடைக்கிறவரை இவர்கள்தான் குற்றவாளிகள்.

'ஆளைத் தூக்கில் போட்டு விட்டால்'

'பயப்படவேண்டியதில்லை. நம நீதிமன்றங்கள் நீதி வழங்கவில்லை என்று குறை கூற முடியாது; நிதானமாக வழங்கும் அவசரப்பட்டு எந்தத் தீர்ப்பும் வழங்காது. எந்தக் கொலை வழக்கும் ஏழு வருடத்திற்குக் குறையா

மல் நடக்கிறது இல்லை; அதுக்கப்புறம் இருக்கிறது கருணைமனு. 'டூப்' இல்லாமல் படம் எடுக்க முடியாது; கொஞ்ச நாளைக்கு அவன் கஷ்டப்பட வேண்டியதுதான். நாங்கள் வெளியே விட்டாலும் அவர்கள் விட்டுப் போவதாக இல்லை.

'குற்றம் செய்யாதவர்கள் தண்டிக்கப்படுவது அநியாயம்தானே'

'இப்பொழுது செய்யாமல் இருக்கலாம், அந்த நோக்கம் அவர்களுக்கு இருந்திருக்கிறது, அதை அவர்களே ஒப்புக் கொள்கிறார்கள்'

'அவன் கொலை செய்யாமல் இருக்கலாம்; ஆனால் அவனுக்கு வாய்ப்புக் கிடைத்திருந்தால் அவளை வம்புக்கு இழுத்து இருக்கமாட்டான் என்பது என்ன நிச்சயம்?'

'உங்கள் தருக்கம் சரியாக இருக்கலாம்; ஆனால் உண்மைக்குப் புறம்பானது.'

'குற்றம் செய்தவர்களைத்தான் தண்டிக்கவேண்டும் என்பதில்லை குற்றவுாளிகளைத் தண்டிக்கலாம். இது தான் எங்கள் வழக்கம்'.

போலீசு அதிகாரிக்கும் அவர்களை வீட்டில் அதிகாரம் செய்யும் அவர் மனைவிக்கும் நடந்த தருக்கவாதம் இது.

அந்த அம்மையாருக்கு 'மவுன ராகங்கள்' படம் நினைவுக்கு வந்தது.

'கார்த்திக்' அப்பொழுது தவறு செய்யவில்லை. என்றாலும் முன் தவறு செய்திருக்கிறான். தண்டிக்கப்பட வேண்டியவன்தான் என்று சமாதானம் அடைகிறார்.

ஸ்டுடியோவுக்குள் போலீஸ் ஜீப் நுழைகிறது. மூடிய கதவு திறக்கப்பட்டது, 'ஊரைப்'பற்றித்தான் விசாரிக்க வந்தார்கள்' என்று பேச ஆரம்பித்தார்கள்.

'நேரே புரொடியூசர் அறைக்குள் அதிகாரி நுழைகிறார். அவருக்கு வியப்பாக இருந்தது'.

''வாங்க சார் காஃபி, ஓவல், ஜுஸ், இது திரைஅரங்க பரிபாஷை.

'ஒன்னும் வேண்டாம் இப்பத்தான் சாப்பிட்டு வந்தோம்' முதல் பொய் அது.

'Hof' ஏதாவது'

'Cool ஆகிவிட்டது என்று நினைக்கிறீங்க

இன்னும் சூடு தணிய வில்லை' அவர் பாஷை அது.

'டிரைவர் சுந்தரத்தை வெளியே விட்டு விட்டீர்களா?''

'இல்லை''

'பின் மூன்றாவது ஆள் யாராவது தேவைப்படுகிறதா? யார் வேண்டும் சொல்லுங்க அனுப்பி வைக்கிறோம்'

''நீங்கதான் வேண்டும்''

புரொடியூசருக்குப் புதிராக இருந்தது.

'அவன் இன்னும் ரிலீசாகவில்லையா?'

'அவன் ரிலீசாகத்தான் இந்த முயற்சி'

'வேறு யார் மீதாவது சந்தேகமா?'

'சந்தேகப் படுவதற்கு வாய்ப்பு இருக்கிறதா என்று பார்ப்பதற்குத்தான் வந்தோம்'

'ஊர்மிளாவின் நடத்தை எப்படி?'

'சிறந்த நடிகை; ஷோபாவே மறுபிறப்பு எடுத்து வந்திருப்பது போல் ஒரு சாயல்'.

'இரண்டு நடிகைகளின் முடிவும் ஒரே மாதிரியாக இருக்கிறதே! உங்களுடைய யூகம் என்ன?'

'இது படுகொலை; அது தற்கொலை'

'வெளிப்பட்டு விட்டால் படுகொலை; அதுவே மறைக்கப்பட்டு விட்டால் தற்கொலை. இதுதான் இரண்டுக்கும் உள்ள வித்தியாசம்'.

'அவள் மறைவினால் உங்களுக்கு இழப்பு அல்லவா?'

''திரை உலகத்துக்குப் பெரும் இழப்புதான். ஆனால் எங்களுக்கு இல்லை. ஈடுசெய்ய உடனே இந்தக் கல்லூரிகள் இருக்கின்றன. இன்ஜினியர் படிக்கும் பெண்கள் எல்லாம் தாவிக்குதிக்கக் காத்துக் கிடக்கிறார்கள் மெடிக்கல் காலேஜ் வேணுமா சட்டக்கல்லூரி வேணுமா இப்ப எல்லாம் நாங்கள் தேட வேண்டிய அவசியமே இல்லை; அவர்களே எங்களைத் தேடி வருகிறார்கள்''

'தனிப்பபட்ட முறையில் உங்களுக்கு எந்தத் தாக்கமும் ஏற்படவில்லையா'

''ஏக்கம் ஏற்பட்டது உண்டு; தாக்கம் இல்லை; அதை சரிப்படுத்திக் கொண்டோம்.

ஒரு நடிகை அகாலமரணம் அடைகிறாள். இது போலீசுக்கு மர்மக் கொலை. பத்திரிகைகளுக்கு, ரசிகர்களுக்கு வாசகர்களுக்கு ஒரு செய்தி; எங்களுடைய

கதாப்பாத்திரம் சாகிறார்; கதையை மாற்றுவதாற்குச் செய்ய வேண்டிய அடுத்த ஏற்பாடு என்ன என்பதில் ஈடுபடுகிறோம்.

'உங்கள் தொழில் பயங்கரமாக இருக்கிறதே'

'அரசியலைப் போன்றதுதான்; இவர் இல்லாவிட்டால் ஒன்றும் நடக்காது என்று பேசிக் கொள்வார்கள். தேர்தலில் அவர் மண்ணைக் கவ்வுவார்; அடுத்த தலைவரைப் பற்றிப் புகழ்வார்கள்; இது அரசியல்; அதைவிட வேகமானது திரையுலகம்; 'புது முகம் எதிர் பார்க்கும் ரசிகர்களுக்கு ஒரு நடிகையின் மரணம் அதிர்ச்சியை ஏற்படுத்துவது இல்லை.

''திரைப்படக் கவிஞர் ஒருவர் 'விண்மீன் விழுந்து விட்டது' என்று கதறி அழுது இருக்கிறாரே'

'அது அவருடைய திரைப்படத்துக்குத் தலைப்பு'

'உங்களுக்கு இதயமே இல்லை'

''இல்லை என்றுதான் மருத்துவர்களும் சொல்கிறார்கள். கல்லுக்குள் ஈரம் படம் பார்த்திருக்கிறீர்களா'

'பாரதி ராஜாவுடையதுதானே'

'அதுதான் சினிமாக்காரன்' அவன் சுக துக்கங்களைத் தோற்றுவிப்பவன்; அவன் சமநிலையில்தான் இருப்பான். கோடிக் கணக்கான பணம் கொட்டி இரைப்பான், வாரி எடுக்க முடியாமல் தூக்கி எறியப்படுவான். ஒன்றுமில்லாமல் ஆரம்பிப்பான்; ராஜேந்தர் நடை போட்டு ஓகோ என்று உயர்வான். கோபுரம் மண்மேடு ஆகும்! குப்பை கோபுரம் ஆகும். காரண காரியம் அமையாத தொழில் இது. நாங்கள் கதையை நம்பிப் படம்

எடுப்பதே இல்லை; கதை எங்களை நம்பித்தான் உருவா கிறது. Artist தான் எங்களுக்கு உயிர்; அவர்கள் தான் எங்கள் பேச்சு. நடிகர்களுக்கு எல்லாம் பஞ்சம் இல்லை உழைத்து முன்னுக்கு வர முடியாது என்று அறிந்த இளை ஞர்கள் இங்கேதான் வந்து முட்டிக் கொள்வார்கள். எம்ப்ளாய்மெண்டு எக்சேஞ்ச் இரும்புக்கதவு; இது கண்ணாடிக்கதவு; இரண்டிலும் உள்ளே நுழையமுடி யாது; ஆனால் உள்ளே கவர்ச்சிகரமான தோற்றம் இருக் கிறது; ஓகோ என்று சம்பாதிக்கலாம் என்று வருவார்கள்; நடிகர் நடிகையர் சிரிப்பு அமர்க்களத்திலேயே மயங்கி விடுவார்கள். இவர்களைப் பேட்டி காணப் பத்திரிகை யாளர்கள் வீடியோப்பட ஏக்நாத்கள் பேனர்கள் விளம் பரம்; எங்களுக்கு வாழ்க்கை இருட்டடிப்புதான் இதிலே இறங்குறவர் எழுபது பேர் என்றால், ஏறி இறங்காதவர் ஏழு பேர்தான்'

'உங்களை லெச்சர் அடிக்க வரச்சொல்லலை.

உங்க 'Artist' எப்படிப்பட்டவர்கள் என்றுதான் கேட்க வந்தோம்.

'தனிப்பட்ட வாழ்க்கையை விமரிசனப் படுத்துவது நாகரிகம் அல்ல'

'வீதிக்கு வந்தபிறகு விமரிசனத்துக்கு ஆளாக வேண் டியதுதான்'

'யாரோடு அவள் நெருங்கிப் பழகுவாள்'

'அம்மாவோடு'

'கலியாணமாகாத எந்தப் பெண்ணும் அப்படித் தான்; அடுத்தபடியாக'

'அப்படி யாரையும் குறிப்பிடமுடியாது. அவர் களுக்கு யாதும் ஊரே யாவரும் கேளிர்' நெருங்கிப்பழகு வார்கள்; ஆனால் நெருங்கவிட மாட்டார்கள். நேசிப் பார்கள்; தம்மை இழக்கமாட்டார்கள்.

'தத்துவம் பேச வரலை. சத்தியம் காண வந்தோம்'

'நீங்கள் திரைப் படத்துக்குக் கதை வசனம் எழுதித் தோல்வி அடைந்திருக்க வேண்டும் என நினைக்கிறேன்.

'எப்படிச் சொல்கிறீர்?

'எதுகைமோனை செயற்கையாக இருக்கிறது அதை வைத்துத்தான்''

'தாக்குகிறீரா தூக்குகிறீரா தெரியவில்லை'

''உங்களைப் போன்றவர்கள்தான் திரைப் படத் துக்கு வரவேண்டும் என்பது எங்கள் ஆசை'

''ice வைக்கிறீர்; nice ஆகப்பேசித் தப்பிக்கப் பார்க்கிறீர்.

உங்களுக்கும் ஊர்மிளாவுக்கும் உறவு உண்டு' என் கிறோம்.

'அவள் என் மகனுக்கு மாமன் மகள்; அவனுக்கு அவளைக் கட்டிவைக்கப் போரகிறேன். நீங்க ஒண்ணு'

''உறவு அல்ல தொடர்பு நீங்கள் அவளைத் தொட்டது உண்டா''

'தொட்டது உண்டு; ஆனால் அவள் கெட்டது இல்லை'

'காரணம்?'

'வயசு தான்'

'சம்பவத்தன்று நீங்கள் அவள் வீட்டுக்குப் போனது உண்டா?'

'குளிக்கச் சென்றது உண்டு. ஆனால் சேறு பூசிக் கொள்ளவில்லை'

'சந்தனம் பூசிக் கொண்டீர்களா?' என்று கேட்கிறேன்.

'எனக்குச் சிரிப்பு தேவைப்பட்டது; அதற்காக அங்குப் போவது உண்டு'.

'வீட்டில் உங்க மனைவி இல்லையா?'

'இருக்கிறாள். அவள் என்னை அழ வைக்காமல் இருந்தால் அதுவே அதிகம்'

'சிரிப்பதற்கா வா அங்குப் போவார்கள்'

'உங்களுக்கு இப்ப புரியாது; வயது ஆகட்டும் தெரியும்'

'அவளைப் பார்த்தீர்களா? அவள் சிரித்தாளா?'

'அவள் சீரியசாக இருந்தாள்'

'என்ன தான் சொன்னாள்?'

'நடிப்புக்கு முழுக்குப் போடப் போகிறேன்' என்றாள்.

'காரணம் என்ன?'

'அவள் திருமணம் செய்து கொள்ள நிச்சயிக்கப் பட்டிருக்கிறாள்' என்பதுதான் அதற்குக் காரணம்.

'சரி தொழிலுக்கு வருவோம்'

'அவள் நடிகர்களோடு கோவாபரேடிவ் பண்ணு வாளா'

'ஆபாசமான் கேள்வியா கேக்கிறீங்களே'

'நடிப்பில் கேட்கிறேன்'

'இவள் ஆடுவாள்; அவர்கள் நடிப்பார்கள்'

'அப்படின்னா எனக்கு ஒன்னும் புரியலையே?

'டியூட் என்பதே அப்படிதாங்க. பெண்கள் நாட்டியம் கற்றவர்கள்; ஒழுங்காக ஆடுவார்கள். ஓரிரு நடிகர்கள் தவிர மற்றவர்கள் கோமாளித்தனமாக ஆடுவார்கள். மற்ற தொழில் விவரமெல்லாம் டைரக்டருக்குத்தான் தெரியும். அதோ வெய்யிலில் மண்டையைப் போடுகிறாரே அவர்தான் டைரக்டர்.

'என்னங்க இது டைரக்டருக்கு சின்னவயசா இருக்கே'

'வழுக்கை அவ்வளவுதான்; இது தொழிலுக்கு அடையாளம்'

'தலையிலே தொப்பி எதுக்குங்க?'

'உங்களைப் போலத்தான். யாராவது கல் எறிந்தால் அடிபடாமல் இருக்கத்தான்'

'கல்லா!'

'படம் தோல்வி அடைந்தால் முதலில் தாக்கப்படுவது டைரக்டர்தான். அவன் மட்டும் கண்லே பட்டும்டாப் கழற்றிடுறேன் என்று பேசிக்கொள்வதை நீங்கள் கேட்டதில்லையா? படம் வெற்றி பெற்றால் நடிகருக்குப் புகழ். தோல்வி அடைந்தால் டைரக்டருக்கு இகழ். இது தொழில் பண்பாடு.

வசனகர்த்தா ஏடும் கையுமா ஓடிக் கொண்டிருக் கிறார்.

'அது என்னங்க கையிலே?'

'வசனம்'

'என்ன விசனமாக இருக்கிறீர்?'

'நடிகையின் மரணம்தான் காரணம்'

'தமிழிலே அழகாப் பேசுவாங்க. தமிழன்னை ஒரு தவப்புதல்வியை இழந்து விட்டாள்; அதற்காகத்தான் வருந்துகிறேன்.'

'நடிகை ஊர்மிளாவை உங்களுக்குத் தெரியுமா?'

'அவர்களைப் பேசவைக்கிறதே - நான் தான். ஊர்வசி கூட இவங்ககிட்டே வந்து பிச்சை எடுக்கணும்'

'முந்தானை முடிச்சு ஊர்வசியா'?'

'இல்லை. இந்திரலோகத்து ஊர்வசி'

'அவங்க இங்கே வந்தது உண்டா'?

'அங்கே டான்சு ஆடி அலுத்துப் போச்சு புது மார்க்கட்டுத் தேடி இங்கே வந்து மூர்மார்க்கட்டுப் பக்கம் வந்தாங்க; அது இருந்த இடமே தெரியாமல் மறைந்து போச்சு; அங்கே இருந்த 'பிக்பாக்கட்டுங்க' எல்லாம் என்ன ஆனாங்க என்று கேட்டாங்க; விசாரிச்சாங்க; யாரும் சரியாக பதில் சொல்லலை'

'அப்புறம் திரும்பிப் போயிட்டாங்களா'?

'அவங்களைக் கேக்காமலே ஆட்டோக் காரன் கோடம்பாக்கத்துக்குக் கொண்டு போய்விட்டுட்டான்'

''ஏன் அப்படி?'

''உருப்படியா சென்ட்ரல் ஸ்டேஷன்லே இருந்து வந்தால்...கேக்க வேண்டியதில்லை அவங்களுக்குத் தெரியும் இது கோடம்பாக்கம் கேசுதான் என்று''

''நடிக்க சான்சு கேட்டாங்க இவங்களைப் பாரு அவங்களை பாரு என்று சொன்னாங்க. யாரும் இவங் களை பார்க்கிறதா இல்லை. டிஸ்கோ சாந்தி வீட்டுக்கு பிஸ்கோட் பாக்கட் வாங்கிக்கிட்டுப்போய்ப்பார்த்தாங்க'

'பிறகு என்ன ஆச்சு''

உனக்குத் 'துண்டுபீடி வருமா' என்று கேட்டாங்க.

'குச்சி பூடிதான் தெரியும்' என்றாங்க;

'இங்கே 'துண்டு பீடிக்குத்தான்' சான்சு; பேசாமல் வந்தவழி பார்த்துகிட்டு போங்க' என்று சொல்லிட்டார்.

டி.வி-யிலே சான்சு கிடைக்கும் 10 மணிக்கு மேலே ஆட வைப்பாங்க எல்லோரும் தூங்கற நேரம் அதனாலே உங்களுக்கு தைரியமா சான்சு தருவாங்க'

'அப்புறம்'

Air port-ல் ரம்பையைச் சந்திச்சாங்க'

'என்னடி இங்கே என்ன பண்றே'

'AIR HOSTESS ஆ இருக்கேன் நமக்கெல்லாம் இங்கேதான் சான்சு; Sheduled Class list-லே எனக்கு இடம் கிடைச்சுது'

'அதென்னடி அது'

'நாம் பின் தங்கியவர்கள் என்று சேர்த்து இருக் காங்க'

'காலம் காலமாக தேவலோகத்திலே தனி மனித னுக்காக ஆடி உழைத்துக் கரை ஏறாதவர்கள் என்பதால் ஷெடியூல் Caste-லே சேர்த்து இருக்காங்க.'

'too late விசுவாமித்திரர் படம் எடுத்து முடிச் செட்டாங்க'

'என்னய்யா கதை அளக்கறே'

'நீங்க producer இல்லையா'

'போலீசு'

'நசீருக்கு பிறகு போலீசு நடிப்புக்குப் புதுமவுசு ஏற் பட்டுப் போச்சுங்க,'

'நடிகர் இல்லை; போலீசு அதிகாரி'

'ஓ: கொலை கேசா'

'நடிகை ஊர் மிளாவை யார் கொலை செய்தது'

'கொலை செய்தது யார் என்று தெரியாது அதற்குக் காரணம் நாங்கதான்'

'என்னய்யா உளர்றே'

'திரைப்படமே பார்க்கிறது இல்லையா அதிலே கொலை செய்றது எப்படி கொள்ளை அடிக்கிறது எப்படி என்று சொல்லிச் கொடுப்பதே நாங்கதான்'

'பயங்கர வாதியா இருப்பே போல இருக்கே'

'நக்சலைட்டு செய்ற பிரச்சாரத்தைவிட தீமை களை விவரிச்சிக் காட்டுவதே நாங்கள் தான் என்று வேகமாகப் பேசினாள். எங்களைப் போன்ற எழுத்தாளர் லட்சிய வெறி இல்லாமல் எழுத்து வெறி மட்டும் கொண்டு இருக்கிறோம். மர்மக் கொலைகள் இந்த நாவல்கள் தான்

இன்றைய இலக்கியம். பாரதி, பாரதிதான் இவர்கள் அமரர்கள் ஆகிவிட்டார்கள். நாங்கள் தான் எங்க எழுத்துதான் திரைப்படக்கலைகள். இளைஞர்கள் இன்று திசை மாறிப் போனது எங்களால்தான்' அதற்கு நாங்கள் தான் காரணம் என்று சொன்னேன்.

நம்பிக்கை இழந்து விட்ட நம்பிகளுக்கும் நங்கைகளுக்கும் நம்பிக்கை ஊட்டுவது நாங்கள்தான். ஒவ்வொரு படத்திலும் வில்லன்களைப் படைத்து, அவர்களை மேல் மட்டத்து மனிதர்களாகக் காட்டுவது, அவர்கள் சமுதாயச் சுரண்டர்காரர்கள் என்று காட்டுவது, அவர்களைக் கீழ் நிலையில் உள்ள ஹீரோக்கள் கண்டு பிடித்து இனம் காட்டுவது, அவர்கள் பெண்களை இவர்கள் மணம் முடிப்பது, அதோடு சமுதாயப் புரட்சியை நிறுத்தி விடுவோம். இதுதான் எங்க பொழைப்பு'

'அதைக் கேக்கலை'.

இந்தக் கொலையைச் செய்தது யார்?

'உங்களுக்குத் துப்புதுலக்க வேண்டுமா? எங்கள் கதை இலாக்கவைப் போய்ச் சந்தியுங்கள் அவர்கள் clue கொடுப்பாங்க.'

'அப்படி ஒரு இலாக்கா இருக்குதா?'

'ஒட்டு வேலை செய்வது அவர்கள் தொழில். அவர்கள் கொடுக்கிற கதைக்குத்தான் நான் வசனம் எழுதுவது'

## நடிகர் தரணி

'நடிகர் தரணி அவர்தான்'

'முரட்டு ஆளாக இருப்பார் போல இருக்கே'

'பெண்ணைத் தலைமேல் வைத்துக் கொள்வார்'

'பலசாலி அவர் அதனால் அவரோடு நடிக்கப் பயப் படுவார்கள்'

'நடிப்பது அவருக்குப்பிடிக்காது; சண்டை போடு வதுதான் பிடிக்கும்'

'காதல்மன்னன் என்று பெயர் வாங்க முனைபவர்'

'சார் உங்களோடு கொஞ்சம் பேசணும்'

'Call Sheet தரலையே'

'Just a minitue

'Shall adjust and come'

'சார் நீங்க ஊர்மிளாவின் சாவோடு தொடர்புப் படுத்தப் பட்டிருக்கிறீர்கள்'

'வாழவேண்டியவன் நான்'

'அவள் சாவிற்கு நீங்கள் காரணமாக இருந்திருக் கிறீர்'

'ஊர்மிளா என்பது யார்? எனக்குத் தெரியாது'

'சார் நீங்க அவளோடு நடித்திருக்கிறீர்கள்'

'இதெல்லாம் எனக்குக் கவனம் இருப்பது இல்லை'

'என்ன படத்தில் நடித்திருக்கிறீர் என்பதாவது

தெரியுமா?'

'டைரக்டருக்கே தெரியாது; படம் ரிலீசானதுக் கப்புறம்தான் நாங்க இதிலே நடிச்சிருக்கோம் என்று தெரியுது. பெயரே முடிஞ்சப்புறம்தான் வைக்கிறாங்க'

'உன்னோடு நடித்தவள் மறுநாள் பிணமாகி இருக் கிறாள், இதுவாவது தெரியுமா?'

'அதைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய அவசி யமும் எனக்கு இல்லை'

அவள் செத்துவிடுகிறாள் நீங்கள் அழணும் இப்படி ஒரு சீன்'

"Impossible அப்படி அழுது எனக்குப்பழக்கமில்லை,

'உங்களை அழவைக்கக் கூடிய செய்தி ஒன்று உங் களுக்குக் காத்திருக்கிறது'

'ஒரு நிமிஷம் என்றீர்கள் ஒன்பது நிமிஷம் எடுத்துக் கொண்டீர்களே...

'Sorry'

'புதுசா ஒருத்தியோடு நடிக்கப் போறீங்க அதுவா வது தெரியுமா''

'கதையிலே ஒரு மாற்றம் என்று சொல்றாங்க! நேற்று வரை நான் ஒரு bachelor. இன்று ஒரு குழந்தைக் குத் தகப்பன்'

'காதல் சீன் இல்லாமல் நடிக்க முடியாது என்று சொன்னீர்களாமே'

'அது இல்லாமே தமிழ்ப்படமே கிடையாது. கிழவியைக்கூட குமரியாக்குவோம். கற்பனைக் காட்சி அமைத்துத் தருவார்கள். நான் அவளை Sight அடிப்பேன், அப்பொழுது ஒரு fight வரும். அதற்கப்புறம் தான் நான் காதலிக்கத் தக்கவன் என்று ஒரு impression உண்டாக்க முடியும் 10 பேரையாவது அடிக்கும் வல்லமை படைத்தவன் தான் தமிழ் ஹீரோ. அந்தக் காலத்தில் இராமர் வில்லை வளைத்தார்; நாங்கள் வில்லன்களின் பல்லை உடைக்க வேண்டும்; அப்பொழுதுதான் அவள் பல்லைக் காட்டுவாள் நாங்கள் முல்லை சூட்டுவோம்;

'புது நடிகை காராத்தே பயின்றவள்'

'அப்படியானல் அவள் 10 பேரை அடித்து வீரத்தை நிலை நாட்டுவாள். அவளுக்கு நான் சிரம் வணங்கித் தலை தாழ்த்துவேன். எப்படியும் fight இல்லாமல் எங்கள் sight-க்கு அர்த்தமே இருக்காது.

'மறுபடியும் உங்களைச் சந்திக்கிறோம்' என்று சொல்லிவிட்டுக் காவல் அதிகாரி விடைபெறுகிறார்.

— — —

## 5

மறுபடியும் ஒரு வாரம் கழித்துக் காவல் அதிகாரி படப்பிடிப்பில்தான் கலந்து கொள்ள வருகிறார் என்று நினைத்தவர்கள் ஏமாற்றம் அடைந்தனர். அவர்கள் அதிகார பூர்வமான அரெஸ்டு அழைப்போடு உள்ளே நுழைகின்றனர்.

'சார் நீங்க ஸ்டேஷன் வரை வரமுடியுமா?'

'மேக்கப்பைக் கலைக்கணுமே'

'அதை நாஙக கலைக்கிறோம். Van-லே ஏற முடியுமா?'

'ஏன்? எதற்கு?'

'போனவாரம் புது நடிகையோடு நடித்தீர் அல்லவா?'

'அவளுக்குக் கவர்ச்சி இருக்கிறது; ஆனால் நடிக்கத் தெரியவில்லை'

'அவர்களோடு நீங்கள் நடித்தபோது, அவளைக் கட்டித் தழுவி இருக்கிறீர்'

'ஆம்! இப்போதான் நினைவுக்கு வருகிறது'

'அதில் அவள் மயங்கி உங்களை மணம் செய்து கொள்ள விருப்புகிறாள்'

'I am really happy'

'ஆனால் அவளுக்கு ஏற்கனவே மணம் ஆகிவிட்டது'

'I am disappointed'

'கொஞ்சப் ஓவராக நடித்து இருக்கிறீர்'

'இது தமிழ்ப்படம். அப்படித்தான் இருக்கும்'

'நீங்கள் கண்ணியமாக நடந்து கொள்ளவில்லை என்று கம்ப்ளைண்ட் கொடுத்திருக்கிறாரே'

அவங்க மணமானவங்கனு எனக்குச சொல்லவில்லை

'இதை நீங்கள் கோர்ட்டிலே வந்து சொல்லிக் கொள்ளலாம்.

## 6

கோர்ட்டில் வழக்கத்திற்கு மாறாகக் கூட்டம் நிரம்பியது; வக்கீல்கள், சம்பந்தப்பட்டவர்கள் மட்டும் அனுமதிக்கப்பட்டார்கள்.

T.V. தானியங்கியாக சர்வ சுதந்திரத்தோடு இயங்கியதால் அவர்களும் வந்து படம் எடுத்தார்கள். இந்த மாதிரி பரபரப்பான வழக்குகளை T.V-ல் பார்க்கத் தொடங்கிவிட்டனர். இது அவர்களின் முதல் எக்ஸ்பிரிமெண்டு. இந்த மாதிரி விஷயங்களை T.V. ஸ்தாபனத்தார் தொடர்ந்து படம் எடுக்க ஆரம்பித்தனர்.

'அந்தக் காட்சியை 2-nd Channel-வில் ஒலிபரப்பினார்கள். எல்லோரும் ஒலியும் ஒளியும் பார்ப்பதை விட்டு விட்டு இந்த ஸ்டேஷனைத் திருப்பிப் பார்த்தார்கள்.

### நடிகர் கூண்டில் நிற்கிறார்

இதுபோல் பலமுறை நடிப்புக்காக நின்று இருக்கிறார். இது புது அனுபவம்.

'சத்தியமாகச் சொல்கிறேன்' என்று கோர்ட்டு அசிஸ்டண்டு இவருக்காகச் சத்தியம் செய்தார்.

'நடிப்புத் தொழிலுக்கு எப்பொழுது வந்தீர்?.

'என்னைப் பலர் 'பிறவி நடிகன்' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

ரிஷிமூலம் என்ற படத்தை பார்த்திருப்பீர்கள். பார்த்தீர்களானால் எங்கள் மூலத்தைக் கேட்கக்கூடாது'

'நீங்கள் கலியாணமானவரா?'

'எங்கள் வக்கீலைக் கேட்டுத்தான் இதற்கு பதில் சொல்லமுடியும்'

'உங்களுக்குத் தெரியுமா தெரியாதா? அவரை ஏன் கேட்கவேண்டும்?'

'கோர்ட்டில் நாங்கள் எதுவும் சொந்தமாகச்சொல்லக்கூடாது. வக்கீல் சொல்லிக் கொடுத்ததைத்தான் சொல்ல வேண்டும் என்று எனக்கு அறிவுறுத்தப்பட்டது.'

'சரி சரி. நிதானமாகக் கேட்டுச் சொல்லுங்கள்.' நீங்கள் Rash-ஆக நடந்து கொள்கிறீர் என்று குற்றம் சாட்டப்பட்டுள்ளது?'

'அதுதான் வெற்றிக்கே காரணம்'

'அதனால் நடிகையின் தன்மானம் பாதிக்கப்படுகிறது என்பதை எண்ணிப் பார்த்தது உண்டா?

நீங்கள் நடிப்பில் கண்ணியக்குறைவாக நடந்து கொள்வது உண்டு' என்று தீர்மானிக்கிறோம்.

'அது ரசிகர்கள் முடிவு கட்டவேண்டிய விஷயம்'

'நீங்கள் Rash-ஆக நடந்து கொண்டது உண்டா?'

'அதை நடிகைதான் சொல்லவேண்டும்'

'நீர் அவளிடம் முரட்டுத்தனமாகவும் கொஞ்சம் ஓவராகவும் கட்டிப்பிடிததீர்கள்' என்று நாங்கள் சொல்கிறோம்'

"இதில் எல்லாம் எப்படி அளவிட்டுச் சொல்ல முடியும். அவள் வெறும் பொம்மை அல்ல; ஜீவனுள்ள மனிதப்பிறவி; அவர்களின் கவர்ச்சியால் சில சமயம் நாங்கள் எங்களையும் மறந்து உண்மையான உணர்வுக்கு ஆளாகி விடுவது உண்டு; இதை யாராலும் மறுக்கமுடியாது.

'அவளை நீர் அழுத்திப் பிடித்தீரா?'

'அழுத்தம் எங்கே பிடிப்பு எங்கே என்று சொல்ல முடியுமா?'

'இங்கே எதையும் சீரியசாக யாரும் எடுத்துக்கொள் வதில்லை. புது நடிகை. அதனால் இதற்கு விதிவிலக் காக இருக்கலாம்'

'நீர் அவரிடம் முரட்டுத்தனமாகவும் கொஞ்சம் ஓவராகவும் கட்டிப்பிடித்தீர்கள் என்று சொல்கிறார்!'...

'முன்னமே என்னிடம் சொல்லியிருந்தால் அது போல் அவளும் என்னைக் கட்டிப்பிடிக்க அனுமதி கொடுத்திருப்பேன். அப்படி ஒரு சம்பவம் நடந்திருந்தால் அதை நான் பொருட்படுத்தி இருக்கமாட்டேன்'

'அது இல்லை, ஒரு பொம்பளையை ஓர் ஆம்பளைக் கட்டிப்பிடிக்கக்கூடாது. நடிக்கவேண்டுமே தவிர உண்மையாக நடந்து கொள்ளக்கூடாது என்பது தெரியும் இல்லையா?'

'இதில் எல்லாம் எப்படிங்க அளவிட்டுச் சொல்ல முடியும். அவர்கள் வெறும் பொம்மைகள் அல்ல; ஜீவன் உள்ள மனிதப்பிறவிகள். நாங்களும் தவசிரேஷ்டர்கள் அல்ல துடிப்பு மிக்க இளைஞர்கள்; அவர்களுடைய கவர்ச்சி எங்கள் கட்டுப்பாட்டை உடைத்து எறிந்து விடு வது சர்வ சகஜம். இதைப்போய் ஒரு கம்ப்ளைண்டாகக் கொடுத்திருக்கிறார்கள் என்றால், அவர்கள் படஉலகுக் குக் கால் எடுத்து வைத்திருக்கக்கூடாது; குடும்பப் பெண் ணாகக் காற்றோட்டமில்லாத புடவையைச் சுற்றிக் கொண்டு தன் திறமைகளை மூடி வைக்க வேண்டியது

தானே! காற்று விலக்கினாலும் கை செயல்படவேண்டும். ஆட வந்தபிறகு அடி எடுத்து வைக்கமாட்டேன் என்றால் எப்படிங்க முடியும்?'

'அது அல்ல; உன் கைகள்!...'

'நான் அவளை என்னமோ செய்துவிட்டேன் என்று சொல்கிறீர்களே?. என்ன செய்தேன், சொல்லச் சொல்லுங்கள்'

**'You have molested her'**

'Sorry. இப்படித்தான் அமைச்சர்கள் மீதுகூட வழக்குத் தொடுத்திருக்கிறார்கள். இது எல்லாம் நிலைத்து நிற்காது'

'இந்தக் காரணத்தால்தான் ஊர்மிளா பாதிக்கப் பட்டிருக்கிறாள். இரத்த உறைவு ஏற்பட்டு, மரணம் அடைந்திருக்கிறாள்.

'அப்படித் தவறான இடத்தில் கை வைத்ததாக எனக்கு நினைவு இல்லை'

'இடம் தவறான இடம் இல்லை; நீங்க செய்த செயல்தான் தவறானது'

'இந்த மாதிரி விஷயங்களையெல்லாம் நான் சீரிய சாகவே எடுத்துக்கொள்வதில்லை; நேற்று நீ எவளோடு இருந்தாய் என்று கேட்டால், இன்று என்னால் பதில் சொல்லமுடியாது. இதெல்லாம் யார் கவனத்தில் வைத்துக்கொள்ளமுடியும். ஏதோ கைப்பட்டா குற்றம், கால் பட்டா குற்றம் என்று சொல்வதற்கு இது ஒன்னும் கணவன்-மனைவி விஷயம் இல்ல. தொழில் என்று வந்த பிறகு இந்த அற்பவிஷயங்களை எடுத்துப் பேசுவது தொழிலுக்கு அழகல்ல.

## டிரைவர்

'நடிகர் தரணியைப் பற்றி ஊர்மிளாவின் அபிப் பிராயம் என்ன?'

'முரட்டுக்காளை'ன்னு சொல்லுவாங்க.

'நீர் அவளைக் கொலை செய்ததாக ஒப்புக்கொண் டீரே ஏன்?'

'நானாக ஒப்புக்கொண்டதால் கவுரவக் குற்ற வாளி ஆனேன்; ராஜ மரியாதை கிடைத்தது. அப்படி நான் ஒப்புக்கொள்ளாவிட்டால், நீங்கள் ஒப்புக்கொள்ள வைப்பீர்கள்; அதுவரை எனக்குப் பூஜைகள் நடக்கும்.'

'கொலைக்குற்றம் அபாயகரமானது என்பது தெரி யாதா?'

'உங்களால் நிரூபிக்க முடியாது என்பதும் எனக்குத் தெரியும். நான் ஒப்புக்கொண்டாலும் சாட்சிகள் இல்லா மல் ஏற்கமுடியாதுன்னு சொல்வீங்க. அதுவும் எனக்குத் தெரியும்.'

'உங்களை வேலையைவிட்டு நீக்கியது உங்களுக்குக் கோபத்தை உண்டாக்கியிருக்குமே'

'அவர்கள் என்மீது தவறு காண்பித்து வேலையை விட்டு நீக்கியிருந்தால் தவறுதான்; என்னைப் பாராட்டி விட்டு 'நீ அழகாக இருக்கிறாய்; நான் கெட்டுவிடக் காரணமாகிவிடுவாய்' என்று சொன்னபோது நான் பெருமை அடைந்தேன்.

'தன்னைக் காத்துக்கொள்வது பெண்ணின் உரிமை. அதனால் என்னை விலக்கவேண்டிய அவசியம் அவர் களுக்கு ஏற்பட்டது'

'அப்போ நடிகை செய்தது சரி என்கிறீர்கள்'

'கன்னிப்பெண்ணைப் பூட்டி வைத்து அவள் கற்பைக் காக்க முற்படுவது தவறு என்றால் இதுவும் தவறுதான்; பெற்றோர்கள் பெரியோர்கள் மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கையை அவர்களே மேற்கொண்டார்கள். அவர்கள் மீது நான் காதல் கொள்ளவில்லை; ரசிகன் வேறு காதலன் வேறு; ரசிகன் ஆதாரத்தோடு விரும்புவான்; அழகையும் கலையையும் விரும்புபவன் கலைஞன்; காதலன் கவர்ச்சியால் அறிவு கெடுபவன்; மயக்கம் அவன் நோய்; காதலன் ஒருவனாகத்தான் இருக்கமுடியும், ஆனால் ரசிகர்கள் பல்லாயிரக் கணக்கில் இருக்கலாம். 'கலை' ரசிகனைத் தேடும்; பெண்மை காதலனைத்தேடும்; நான் ஒரு கலைஞன் காதலன் அல்ல; அவள் கலையில் ஈடுபாடு கொண்டவள்; அவள் 'சாவு' என்னை அதிரச் செய்தது. அரசியல் தொண்டன் மண்எண்ணெயைத் தேடுகிறான்; நான் உங்கள் தண்டனையைத் தேடினேன். இது பைத்தியக்காரதனம்தான்; ஒரு வெறியால் ஏற்பட்டது. அத்தகைய வெறியன் நான். அவளைக் கொல்லவில்லை; அவள் சாவதற்கு நான் காரணமும் அல்ல;'

'உனக்கு யார் மீதாவது சந்தேகம் உண்டா?'

'அவள் நடிகர் தரணியிடம் காதல் கொண்டிருக்கிறாள்; அவர் தூண்டிவிட்டியிருக்கிறார்; சுடர்விளக்கு ஒளிவிட்டது. அவன் 'அணைத்து' இருக்கவேண்டும்; அவ்ள் அருகிலேயே அவன் வருவதில்லை. ஏக்கத்தால் தூக்கம் கெட்டிருக்கிறாள்; அவள் இதயம் வெடித்து விடுவது போல் விம்மி விம்மி அழுதிருக்கிறாள்; அதனால் அவள் இறந்திருக்க வேண்டும்'

'நடிகர்தான், தனக்கும் அவளுக்கும் தொடர்பே இல்லை என்று சொல்கிறாரே?'

'வீணையைத் தொட்டு இருக்கிறார். மீட்கவில்லை; ஓசை எழுந்திருக்கிறது; அவ்வோசையை ரசிக்க வில்லை. நடிகைதான் என்றாலும் அவளும் ஒரு பெண்தானே; சேர்ந்து நடித்தவள் சேர்ந்து வாழத் துடித்து இருக்கிறாள்; அதே வேதனையில் அவள் ஆழ்ந்திருக்கிறாள். எழவே இல்லை.

'எப்படிச் சொல்கிறாய்?'

'நடிகர் தரணியின் மிடுக்கான தோற்றம் அவளைக் கவர்ந்திருக்கிறது. ஷூட்டிங் முடிந்தாலும் அவர் போன பிறகுதான் காரை எடுக்கச் சொல்வாங்க'

'ஏக்கம்தான் சாவுக்குக் காரணம் என்று எப்படிச் சொல்முடியும்?'

'அதுவும் ஒரு காரணமாக இருக்கலாம்; வெறும்சந் தேகமே தவிர, உண்மை என்று கூறமுடியாது'.

'தரணி எப்பொழுதாவது வீட்டுக்கு வந்திருக் கிறாரா?'

'வந்தால் அவங்க ஏன் சாகறாங்க. நான்தான் சொன்னேனே அவர் ஒரு முரட்டுக்காளைன்னு'

— — —

## 8 நடிகையின் தாயார்

'நீங்கள் யார்?'

'தாயார்'

'நடிகையின் தாய் யார்?'

'நான்தான். அவளைப் பெற்றவர், வளர்த்தவர்; படிக்க வைத்தவர்; நடிக்க விட்டவள்.'

'நடிப்பில் புகுத்தியதற்குக் காரணம்'

'அது ஒரு தொழில்; தொழில் செய்வது இந்தியப் பிரஜையின் அடிப்படை உரிமை'

'அதுவல்ல. கலைத் துறைக்கு வந்த காரணம்'

'அழகாக இருந்ததுதான்'

'அது மட்டும்தான் காரணம் என்று சொல்ல முடியுமா?'

'அதிகம் சிரிப்பாள்; கொஞ்சம் வெட்கத்தைவிட்டுப் பழகக்கூடிய சுபாவம் உள்ளவள்; நாட்டியம் கற்றிருக்கிறாள்'

'இது கவுரவமான தொழில் என்றுதானே அனுப்பினீர்'

'தொழிலில் கவுரவம் கிடைக்கும் என்றுதான்'

'ஆரப்பத்தில் தயக்கமாக இல்லையா?'

'எனக்கு இருந்தது; அவளுக்கு இல்லை'

'இந்தக் காலத்தில் நடிகைகள் பேட்டியில் பணத்துக்குத்தான் நடிக்கிறோம்; எந்தப் பாத்திரமானாலும் கவலையில்லை என்கிறார்களே'

'அவர்களுக்குக் காரணம் தெரிவதில்லை. முதலில் நடிக்கவேண்டும் என்று நுழைகிறார்கள். தமக்கென்று ஒரு இடம் பிடிக்கவேண்டும் என்று முயல்கிறார்கள். புகழ் ஏணியில் உயர்கிறார்கள். பிறகு நுழைந்த பின் நோக்கத்தை மறந்து விடுகிறார்கள். பணத்துக்கு என்று தவறாகச் சொல்லிவிடுகிறார்கள்.

'உங்கள் மகள் இழப்புக்கு யார் காரணம்? உங்களுக்கு யார் மீது சந்தேகம்?'

'பேய்தான் காரணம்.

அன்று அவள் ஒரு பயங்கரமான பேய்ப்படத்தை வீடியோவில் பார்த்துக் கொண்டிருந்தாள்; அந்த நினைவில் உறங்கி இருக்கிறாள்; நடுசாமத்தில் அலறி இருக்கிறாள்; மார்பில் ஒரே நோவு என்று கதறி இருக்கிறாள். டாக்டரை அழைப்பதற்கு முன் அழைப்பு வந்து அவள் எங்களை விட்டுப் போய்விட்டாள்.

'நீங்கள் கொலை செய்து விட்டதாக வாக்குமூலம் தந்திருக்கிறீர்களே?'

'அவள் எனக்கு ஒரே மகள். அவளே போனபின்பு நான் உயிர் வாழ்வதில் அர்த்தமேயில்லை. தற்கொலை செய்து கொள்ள எனக்குத் தெரியாது; நானோ கிழவி, என்னைக் கெடுத்துவிட்டுக் கொலை செய்ய யாரும் வரப் போவதில்லை; தூக்குதண்டனைதான் சரியான வழி அறிஞர்கள் நீதிமான்கள் நிதானமாக யோசித்துத்தெரிந்து செய்யும் கொலைக்குத்தான் தீர்ப்பு என்று பெயர். சில நாடுகளில் இந்த வாய்ப்பு இல்லை; தூக்குதண்டனையை ஒழித்து விட்டார்கள். நம் நாட்டில்தான் இன்னும் நாகரிக முடிவாக வைத்திருக்கிறார்கள். நாட்டுக்கு உயிர்

கொடுத்த தியாகிகள் ஏற்றுக் கொண்ட மரணத்தை நான் என் மகளுக்காக ஏற்கத் துணிந்துவிட்டேன். அவளையும் மீட்கமுடியாது; என்னையும் அழிக்கமுடியாது; அதனால் எனக்குத் தோன்றிய ஒரே வழி இதுதான்.

'உங்க கருத்து தவறானது; நிரபராதிகள் தண்டிக்கப்படுவதில்லை. ஒருவரைத் தூக்கிலிடுவதால் மற்றவர்கள் கொலை செய்ய அஞ்சுவார்கள். இது தண்டனை இல்லை தடுப்பு நடவடிக்கை' என்றார் அரசாங்க வக்கீல்.

'நீதிபதி : இது பட்டிமண்டபம் இல்லை; நீதிமன்றம்'

'சரி! நீங்கள் கொலை செய்யவில்லை. தரணி என்ற நடிகர் உங்கள் வீட்டுக்கு வந்தது உண்டா?'

அவரைப் பற்றிப் பேசுவாள்; ஆனால் அவர் இங்கே வரமாட்டார் என்பாள்'

'அவரைப்பற்றிய உங்கள் அபிப்பிராயம் என்ன?'

'தங்கமான பிள்ளை. தவறு செய்யக் கூடியவர் அல்ல'

'அப்ப உங்க முடிவான அபிப்பிராயம்தான் என்ன?

'பேய்தான் அறைஞ்சிருக்கு' பாவிமகளை அந்த மாதிரிப்படங்களைப் பார்க்கதே பார்க்காதேன்னு தலை தலை அடிச்சு சொல்லிஇருக்கேன். கேட்கலை'

— — —

## 9 புது நடிகை

'நீங்க இந்தத் தொழிலுக்கு எப்படி வந்தீங்க?'

'விளம்பரம் பார்த்துதான் வந்தேன்'

'இதற்கு முன்னால் என்ன செஞ்சுட்டிருந்தீங்க'

'எம் ஏ. பட்டதாரி. எப்ப்ளாய்மெண்டு எச்சேஞ்ச் படி ஏறி ஏறி இறங்கி அலுத்து விட்டேன்'

'அங்கு வேலை கிடைக்காததால் இங்கு வேலைக்கு வந்தீர்களா?'

'கண்ணியமான தொழில் என்று இதில் காலடி வைத்தேன்; நடிகர் தரக்குறைவாக நடந்து கொண்டார்; நடிப்பதற்குப் பதிலாக அவர் என்னைக் கட்டி அணைத்தார். நான் திமிறினேன்; என் ஜாக்கெட்தான் கிழிந்தது; அன்றே நடிப்புக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டேன்'.

— — —

## 10 கைரேகை நிபுணர்

புது நடிகை 'பொன்முடி' அணிந்திருந்தஜாக்கட்டில் படிந்திருந்த கைரேகையும் நடிகை 'ஊர்மிளா'வின் ஜாக்கட்டில் படிந்திருந்த கைரேகையும் ஒன்னுதான். இவர் தரக்குறைவாக முரட்டுத்தனமாக நடநது கொள்ளும் சுபாவம் உடையவர் என்று தெரியவருகிறது; அதனால் இவர் முரட்டுத்தனம் Rash and negligent act என்று கருதுவதற்கு இடம் இருக்கிறது.

## 11 மருத்துவர் சாட்சியம்

இதயத்தில் இரத்த உறைவு (Blood Clot) ஏற்பட்டிருக்கிறது. பயத்தினால் ஏற்பட்டிருக்கலாம்; உணர்ச்சி வேகத்தால் ஏற்பட்டிருக்கலாம் அல்லது வன்முறை காரணமாகவும் இருக்கலாம். ஆக மொத்தத்தில் இரத்த உறைவுதான் காரணம்.

— — —

## 12 நீதிபதியின் தீர்ப்பு

அரசாங்க தரப்புவாதம் நடிகரின் வன்முறைதான் என்பது; அவர்கள் மற்ற இரண்டு காரணங்களுக்கும் சாட்சியங்களைக் கொண்டுவந்து நிறுத்தியது பாராட்டத் தக்கது. எப்படியாவது குற்றவாளி தான்தான் என்று நிருபிக்கும் நோக்கம் இல்லாமல், பலதரப்பட்ட அபிப் பிராயங்களுக்கும் சாட்சிகள் கொண்டுவந்து நிறுத்தியதும் பாராட்டதத்தக்கதுதான்.

1) நடிகரின் அஜாக்கிரதையான வன்முறை.

2) நடிகனை அடைய வேண்டும் என்ற ஏக்கமும் பெருமூச்சும் காரணமாக இருக்கலாம்.

3) பேய்பயத்தாலும் இரதத நாளங்கள் வெடித்து இருக்கலாம்.

இந்த மூன்றுவித வாய்ப்புகளுக்கு இடம் இருப்ப தால் சரியான தீர்ப்புக் கூறமுடியாமல் இருக்கிறோம்.

நடிகருக்கு Benefit of doubtt கொடுப்பதுதான் செய்யத்தக்கது. வைத்தியன் மருத்துவம் செய்யும்போது கைபடுவதை தவறு என்று கூறமுடியாது; நடிகனும் ஒரு தொழிலாளி; தொழில்ரீதியில் கைபட்டாலே குற்றம் என்று கூறமுடியாது. நடிகர்கள், கலைஞர்கள். 'காதல் நடிப்பு' என்பது வெறும் நடிப்பே தவிர உண்மை அல்ல; மற்றவர்களை நம்பவைக்கும் இந்திரசாலம் அது. அவரை குற்றவாளி என்று கூறமுடியாது. அவர் உணர்ச்சி வசப் படுவதும் படாததும் அவருடைய தனிப்பட்ட விஷயம். அதை ஒரு காரணமாகக் காட்டமுடியாது. ஆகையால் இது ஒரு தற்செயல் மரணம் என்றுதான் தீர்ப்புக்கூற வேண்டியுள்ளது.

முற்றும்



# நவீன தெனாலிராமன்

## (நகைச் சித்திரம்)

அவன் அறிவாளி; ஆனால் புத்திசாலி அல்ல; அவன் போக்கும் விமரிசனமும் தனி; மற்றவர்கள் நினைப்பது போல் செய்வது போல் அல்லாமல் புதுமையாக ஏதாவது செய்துவிடுவான்; பேசிவிடுவான்; அதனால் அவனைத் தெனாலிராமன் என்று அழைத்தார்கள். புரியாமல் மண்டுவாக இருக்கும்போது 'மாங்காய் மடையன்' என்றும் சொல்வார்கள்.

'நீ ஒரு மாங்காய் மடையன்' என்பார் அவன் தந்தை.

'அப்படியானால் தேங்காய் மடையன்' யாருப்பா என்று குழைந்து கேட்டான்.

'சீனிவாசன்' என்றார்.

கதாசிரியனுக்குத் தலைகுனிவு ஏற்பட்டது.

'யார்'பா அந்த சீனிவாசன்.

'அவர் ஒரு சிறந்த நடிகர். உன்னைப்போலத்தான் சிரிப்பு ஊட்டும்படி பேசுவார் என்றார் அவர்'

'ஓ! தேங்காய் சீனிவாசனைச் சொல்கிறீரா' என்று சிரித்தான்.

கதாசிரியருக்குக் கொஞ்சம் நம்பிக்கை பிறந்தது;

அவர்கள் பேச்சில் தான் அகப்படவில்லை என்று புரிந்து கொண்டார்.

அப்பா சொல்வதால் கல்லூரிக்குச் சென்று படித்து வந்தான். அவனுக்கு ஒரு நல்ல பழக்கம்; தான் அழகாக இல்லாவிட்டாலும பெண்களைப் பார்ப்பது அவனுக்கு ஒரு 'ஹாப்பியாக' இருந்தது. 'இவள் எப்படி இவ்வளவு அழகாக இருக்கிறாள் என்று வியப்பான். அழகு அவனுக் குப் பிடிப்பது இல்லை; அழகில்லாத பெண்களைத்தான் அவன் விரும்புவான். அதற்குக் காரணம் அழகல்லாவிட் டாலும் அவர்களிடம் குணம் இருக்கும் என்று நம்புவான்.

கல்லூரியில தமிழாசிரியர் சிலப்பதிகாரம் பாடம் நடத்தினார்.

கண்ணகி விரித்த கூந்தலும் பிடிதத சிலம்பும் கொண்டு தலைவிரி கோலமாகப் பாண்டியன் அவைக்களத் துக்குப் போனாள் என்று சொன்னார்.

அவனால் கண்ணகியை மறக்கமுடியவில்லை. எதிரே ஒரு கல்லூரிப் பெண் வந்து கொண்டிருந்தாள். அவள் கொஞ்சம் அழகாக இருந்தாள்; இதுதான் அவன் முதல் தடவையாக அழகிய பெண்ணைப் பார்தது ரசித் தது; விமரிசிததது.

(அவள் கூந்தல் கண்ணகியைப் போல் விரிந்து கிடந் தது; வாரி முடிக்கவில்லை.)

'உங்கள் பெயர் கண்ணகியா' என்று துணிந்து கேட்டான்.

'Modern Girl' என்றாள்

'இதுதான் உங்கள பெயரா' என்று கேட்டான்

